

உயிர்களிடத்து அன்பு வேணும்

சின்னஞ்சிறு குருவியைப் போலே-நீ
திரிந்து பறந்து வா பாப்பா

தும்பி சிறுவர் மாத இதழ் ♦ ஜூன் 2016 ♦ கதைத் தேர்வு சக்திவேல் ♦ நிர்வாக ஆசிரியர் அழகேஸ்வரி ♦ ஆசிரியர் சிவராஜ் ♦ ஒருங்கிணைப்பு நேசன் ♦ இதழ் வடிவமைப்பு - கல்ஆல் ♦ தொடர்புக்கு - எண் 60/86, ஐயங்குளம் தெரு, திருவண்ணாமலை - 606 601. பேச - 9843870059 *thumbigal@gmail.com*

வண்ணப் பறவைகளைக் கண்டு-நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா

நன்றியும் ப்ரியமும்

கண்ணம்மா, சாலைசெல்வம், செந்தில், பழனியப்பன், விருட்ஷா, அஸ்வின், ஆர்.வி. பிரகாஷ், ராஜாராம், விஷ்ணுபிரியா, சுயம்புச்செல்வி, ஷோபனா, தியானேஸ்வரன், பூவுலகின் நண்பர்கள், நாணல், ரத்னசெந்தில்குமார், முத்து வெங்கடேசன், பூபதி, வெற்றி, திமில், ஆதிரை, தன்மயா, அனன்யா மற்றும் ஃபாக்சி, டூமா ...

வணக்கம் செல்லங்களே,

இன்னும் கொஞ்ச நாள்ல மழைக்காலம் வரப்போகுது. நமக்கு மழையைப் பத்தி நிறைய கதை இருக்கு.

மழையில நனையலாம்; கப்பல் விடலாம்; மழைப்பாட்டுப் பாடலாம்; ஆடலாம்.

மழைக்குக் குழந்தைகல ரொம்பப் பிடிக்கும். மழை வந்தால் நாம் அதோட விளையாடலாம். அந்த மழை மாதிரியே உங்களோட விளையாட, பாட்டுப்பாட, கதை சொல்ல, காடுகள், மலைகள், பறவைகள், எல்லாமே சேர்ந்த இயற்கையைப் பத்தி உங்களோட நிறையப் பகிர்ந்துக்கத்தான் நாங்க வர்றோம்.

வாங்க வாங்க தும்பிகளா ...

கதை உலகத்துக்கு உள்ளே போவோம்.

சிறகடிச்சு பறந்து வானத்துல வட்டமடிச்சு திரும்புவோம்.

அன்புடன்

தும்பி





# சலேத்தா

யெட்டிஷ் (யூத மூல மொழி) மூலம் : ஐசக் பேஷவிஷ் சிங்கர்
தமிழில் : அவை நாயகன்
ஓவியங்கள் : பிரகாஷ்

திருவிழா நேரம். கிராமத்திலிருந்து
நகரம் செல்லும் பாதை
எப்பொழுதும் பனி
படர்ந்திருக்கும். இந்த ஆண்டு
அப்படியில்லை. திருவிழா
வந்தபின்னும் பனிப் பொழிவு
கொஞ்சமாகத்தான் இருந்தது.
வெயிலையும் அதிகமாகப் பார்க்க
முடிந்தது.

பூமி வறண்டு கிடப்பதால்
பனிக்காலத்தில் விளையும்
பயிர்கள் குறைவாகத்தான்
கிடைக்கும் என்று கிராமவாசிகள்
பேசிக்கொண்டார்கள். எங்கும் புல்
முளைக்கவில்லை. ஆடு மாடுகளை
மேய்ச்சலில் விடவும்
முடியவில்லை.



ஆட்டு ரோமத்தில் கம்பளி தயாரிக்கும் ஆரோனுக்கு இது மோசமான வருடமாகத் தென்பட்டது. நீண்ட யோசனைக்கும், தயக்கத்திற்கும் பிறகு தனது வெள்ளாடு ஒன்றை விற்றுவிடத் தீர்மானித்தார். சலேத்தா என்பது அதன் பெயர். வயது முதிர்ந்த அந்த ஆடு கொஞ்சமாகத்தான் பால் கொடுத்து வந்தது. நகரத்தில் கசாப்புக் கடை வைத்திருக்கும் பேவல், அதைக் கொடுத்தால் எண்ணூறு ரூபாய் தருவதாகச் சொல்லியிருந்தான்.

அவ்வளவு பணத்தில் திருவிழாவுக்கான மெழுகுவர்த்திகள், காய்கறிகள், எண்ணெய், கேக், குழந்தைகளுக்குப் பரிசுப் பொருட்கள், வீட்டுக்குத் தேவையான மற்ற பொருட்கள் எல்லாவற்றையும் வாங்கிவிட முடியும். நன்றாக யோசித்த ஆரோன், தனது மூத்த மகன் ரூபினை அழைத்து அந்த ஆட்டை நகரத்துக்குக் கொண்டு போகச்சொன்னார்.



அப்பா எதற்காக ஆட்டை அழைத்துப் போகச் சொல்கிறார் என்பது ரூபினுக்குப் புரிந்தது. ஆனால், தந்தை சொல் கேட்க வேண்டுமே! அம்மா அழுது கொண்டேயிருந்தார். தங்கைகளும் சேர்ந்து அழுதார்கள். குளிரைத் தாங்கும் மேற்சட்டையும், காதுகளைச் சேர்த்து மூடும் தொப்பியையும் எடுத்து வைத்தான்.

சலேத்தாவின் கழுத்தைச் சுற்றிக் கயிறு ஒன்றைக் கட்டினான். வழியில் சாப்பிடக் கொஞ்சம் ரொட்டியும், பாலாடைக் கட்டியும் எடுத்துக் கொண்டான். மாலை நேரத்துக்குள் நகரத்துக்குப் போய்விட வேண்டும். ஆட்டை, பேவலிடம் ஒப்படைத்துவிட்டு இரவு அங்கேயே தங்கி அடுத்த நாள் பணத்துடன் திரும்பச் சொல்லியிருந்தார் அப்பா.

குடும்பமே நின்று இருவரையும் வழியனுப்பியது. என்றைக்கும் போலவே மிகவும் அமைதியாக நின்றது சலேத்தா. ரூபினின் அப்பாவின் கைகளை நக்கிக் கொடுத்தது. தனது சிறிய தாடியைக் குலுக்கிக் கொண்டது. மனிதர்கள் மீது நம்பிக்கை அதற்கு. உணவு தருவதும், தீங்கு செய்யாமலிருப்பதும் அவர்கள்தானே!

நகரத்துக்குப் போகும் பாதைக்கு வந்தவுடன், குழப்பமாகிவிட்டது சலேத்தாவுக்கு. அந்தப் பாதையில் இதுவரை போனதில்லையே?! தலையைத் திருப்பி, 'எங்கே கூட்டிக் கொண்டு போகிறாய் என்னை?' - என ரூபினைக் கேட்க நினைத்தது. ஆனால், ஆடுகள்தான் கேள்வி கேட்பதில்லையே!

புதிய பாதையில் வயல்கள், மேய்ச்சல் நிலங்கள், கூரை வேய்ந்த குடிசைகளைக் கடந்து அவர்கள் போய்க் கொண்டிருந்தார்கள். நாய்கள் குரைத்துக் கொண்டே குறுக்கிட்டன. ரூபின் தனது கையிலிருந்த குச்சியால் அவற்றைத் துரத்திவிட்டான்.



ஊரைவிட்டுக் கிளம்பும்போது, வெயிலாகஇருந்தது. இப்போது சட்டென மாறிக் குளிரடிக்க ஆரம்பித்தது . கிழக்குத் திசையில் கருநிற மேகங்கள் சூழ்ந்து, வானம் முழுவதும் பரவிக் கொண்டது. நடுங்கும் குளிர் வேறு. காக்கைகள் கரைந்து கொண்டே தாழப் பறந்தன. மழை வரும்போல இருந்தது. ஆனால், திடீரெனக் கோடை காலத்தில் பெய்வது போலக் கல்மழை பெய்ய ஆரம்பித்தது. அது பகல் நேரமாக இருந்தாலும் இருள் படர்ந்து கொண்டிருந்தது. விழுந்த கல்மழை எல்லாம் பனிக்கட்டியாய் மாறத் தொடங்கின.

பனிரெண்டு வயதான ரூபினுக்கு எல்லா விதப் பருவ நிலையும் தெரியும். ஆனால், இது போல் ஒரு பனிப் பொழிவை அவன் பார்த்ததில்லை. இருளைக் கொண்டு பகலை மூடி வைத்தது போல இருந்தது. கொஞ்ச நேரத்திலேயே பாதை முழுவதையும் பனி சூழ்ந்து கொண்டது. ஐஸ் கட்டியைப் போல வீசியது காற்று. நகரத்துக்குச் செல்லும் வழியைக் கண்டுபிடிப்பது சிரமமாக இருந்தது. எங்கு இருக்கிறோம் என்பதே ரூபினுக்குத் தெரியவில்லை. பனியைத் துளைத்துப் பார்க்கத் தெரியவில்லை அவனுக்கு. குளிர் அவனது மேற்சட்டைக்குள் நுழைந்து கொண்டிருந்தது.

சலேத்தாவுக்கு இந்தப் பருவநிலை மாற்றம் முதலில் தெரியவில்லை. அதற்கும் 12 வயது என்பதால் குளிர்காலம் பற்றி நன்றாகவே தெரியும். ஆனால், பனியில் தனது கால்கள் புதைந்து கொண்டிருப்பதைப் பார்த்ததும், குழப்பமாகித் தலையை ரூபின் பக்கம் திருப்பியது. ஆச்சரியமாக எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

'ஏன் இந்தப் பனிப் புயலில் மாட்டிக் கொள்ளவேண்டும் நாம்?' என்று அவனைக் கேட்க நினைத்தது. அவனுக்கோ, யாராவது ஒரு கிராமவாசி வண்டியில் வந்து காப்பாற்றுவார்கள் என்று எண்ணம். ஆனால், யாரும் வரவில்லை.

பனி கடுமையாகப் பெய்து கொண்டிருந்தது. ரூபினின் காலணிகள் உழுது விடப்பட்ட நிலத்தைப் போன்ற மென்மையான பனிக்குள் புதைந்தன. அந்த வழியில் யாரும் வருவது போலவும் தெரியவில்லை. வழி தவறிச் சென்று கொண்டிருக்கிறோம் என்று அவன் நினைத்தான்.

எது கிழக்கு, எது மேற்கு, கிராமம் எங்கே, நகரம் எங்கே - ஒன்றும் தெரியவில்லை. காற்று ஓலமிட்டது; உறுமியது; சுற்றிச் சுழன்றது. பூமியின் மேல் பனிப்புகைப் படலம் ஒன்று கிளம்பியது.

சலேத்தா நின்று கொண்டது. இனி ஓர் அடியும் அதனால் எடுத்து வைக்க முடியாது. பிளந்தது போன்ற தனது குளம்புக் கால்களால் தாங்கி நிற்க முயன்றது. பிறகு குரலெடுத்துக் கத்த ஆரம்பித்தது. பனித் துகள்கள் அதன் தாடியில் இருந்து வழிந்து கொண்டிருந்தன. உறைபனி அதன் கொம்புகளில் படிந்து மின்னியது.

எப்படித் தப்பிப்பது எனச் சிந்தித்துக் கொண்டிருந்தான் ரூபின். உடனடியாக, நமக்கு இப்போது பாதுகாப்பான இடம் வேண்டும். இல்லாவிட்டால், உறைந்து செத்துவிட வேண்டியதுதான். இது சாதாரண பனிப் புயலாகத் தெரியவில்லை. சூறாவளி போல அல்லவா தெரிகிறது. பனி முழங்காலை மூடும் அளவுக்கு வந்துவிட்டது. கைகள் விறைத்துப் போயிருந்தன. பாதம் எங்கிருக்கிறது என்றே தெரியவில்லை. மூச்சுத் திணறியது அவனுக்கு. மரத்துக் கிடந்த மூக்கிலிருந்து பனியைத் துடைத்தெறிந்தான்.

சலேத்தாவின் குரல் இப்போது அழுவது போலத் தோன்றியது. வளர்ப்பவர்கள் மீது மிகுந்த நம்பிக்கை அதற்கு. எங்கேயும் தன்னை மாட்டி வைத்துவிட மாட்டார்கள். ரூபின் கடவுளை வணங்கத் தொடங்கினான் இருவருக்காகவும்.

அப்போது அங்கு சிறிய மலை போன்ற ஒன்றைக் கண்டான். யார் வந்து பனியைக் குவித்து அங்கே மலையாக்கி இருப்பார்கள் என ஆச்சரியம் அவனுக்கு. சலேத்தாவை இழுத்துக் கொண்டு அதை நோக்கிப் போனான். நெருங்கிய போதுதான் அது ஒரு பெரிய வைக்கோல் போர் எனத் தெரிந்தது. பனி மூடியிருந்ததால் மலை போலத் தோற்றம் தந்திருக்கிறது.

'அப்பாடா' தப்பித்தோம். பனியை மிகுந்த சிரமத்துடன் அகற்றி, மலைக்குப் போக வழியை உருவாக்கினான். கிராமத்து பையன் அவன். எந்த நேரத்தில் என்ன செய்வதென்று அவனுக்குத் தெரியும். வைக்கோலைக் கொண்டு தனக்கும் சலேத்தாவுக்கும் என ஒரு பெரிய குடிலை அமைத்தான். வெளியே எவ்வளவு குளிரடித்தாலும் உள்ளே வெதுவெதுப்பாக இருக்கும்.

தனியே எடுத்து வைத்திருந்த வைக்கோலை முகர்ந்து பார்த்துப் பின் உண்ணத் தொடங்கியது சலேத்தா. பனி பெய்வது நிற்கவில்லை. வெளியே செல்ல அமைத்திருந்த வழியை அடைத்து நின்று கொண்டது.





ஆனால், ஒரு சிறுவனுக்கும் ஆட்டுக்
குட்டிக்கும் சுவாசிக்கக் காற்று
வேண்டும். உள்ளே அது
குறைவாகத்தானே இருக்கும்.
ஆகவே, வைக்கோலையும்
பனியையும் எச்சரிக்கையாகத்
துளைத்து ஒரு சன்னலை
ரூபின் உருவாக்கினான்.

சலேத்தா வைக்கோலை உண்டதும், பின் கால்களைக் குறுக்கி உட்கார்ந்து கொண்டது. மனிதர்கள் மீதான அதன் நம்பிக்கை குலையவில்லை. ரூபினுக்கு தனது, ரொட்டி, பாலாடைக் கட்டியை உண்ட பின்னும் பசி அடங்கவில்லை. வேலை செய்த களைப்பு வேறு. சலேத்தாவை உற்றுப் பார்த்தான். அதன் பால் மடி நிறைந்து கிடப்பது தெரிந்தது. அருகில் சென்று உட்கார்ந்து கொண்டான். பாலை உறிஞ்சிக் குடிக்க ஆரம்பித்தான். பால் இனிப்பாகவும் சுவையாகவும் இருந்தது.

சலேத்தாவுக்கு இது போல பால் கொடுத்துப் பழக்கமில்லை என்றாலும் அமைதியாக அனுமதித்தது. தங்கிக்கொள்ளச் சுவரும் தரையும் கொண்ட குடில், வைக்கோலால் அமைந்த கூரை, ரூபினை மனதுக்குள் பாராட்டிக் கொண்டது.



சன்னலுக்கு வெளியே ஏதோ குழப்பம் நடப்பதாக ஒரு கணம் உணர்ந்தான். காற்று, பனியை அள்ளிக் குவித்துக் கொண்டிருந்தது. சுற்றிலும் இருட்டு. அதற்குள் இரவு வந்துவிட்டதா அல்லது பனி மறைத்திருப்பதாலா என யூகிக்க முடியவில்லை. நல்ல வேளை வைக்கோல் நனையாமல் இருந்தது.

குடிலானது உலர்ந்த வைக்கோல், புல், வயல்வெளிப் பூக்கள் கொண்டு வேயப்பட்டு இருந்ததால் உள்ளே கதகதப்பாக இருந்தது. சலேத்தா கூரையின் மேல் கீழாக, இட வலமுமாக வைக்கோலை இழுத்து அடிக்கடி கொறித்துக் கொண்டேயிருந்தது.

கதகதப்பான அதன் உடலை ரூபின் அடிக்கடி அணைத்துக் கொண்டான். அதன் மீது அளவற்ற பிரியம் இருந்தது அவனுக்கு. இப்பொழுதோ தன்னுடைய சகோதரியைப் போலவே அதை நினைத்துக் கொண்டான்.

தனித்து விடப்பட்டுக், குடும்பத்தை விட்டுப் பிரிந்திருந்த அவனுக்கு யார் கூடவாவது பேசினால் நன்றாக இருக்கும் எனத் தோன்றியது.

சலேத்தாவுடன் பேசத் தொடங்கினான். "இந்த நிலைமையைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய், சலேத்தா ...?"

"மா ..." என்றது சலேத்தா.

"இந்த வைக்கோல் போர் கிடைக்கவில்லை என்றால், இரண்டு பேரும் விறைத்துச் செத்திருப்போம் ... இல்லையா ...?"

"மா ..."

"பனி இப்படியே பெய்து கொண்டிருந்தால் கொஞ்ச நாளைக்கு இங்கேயே தங்கிவிட வேண்டியதுதான். சரிதானே ...?"

"மா ..."

உன்னால் பேச முடியாது; ஆனால் நான் சொல்வது உனக்கு புரியும் என்று எனக்கு தெரியும். நான் சொல்வது உனக்குப் புரிந்தால் போதும். இப்போது உனக்கு நான் வேண்டும். எனக்கு நீ வேண்டும். சரிதானா ...?"

"மா ..."

தூக்கம் கண்ணைச் சுற்றியது ரூபினுக்கு. கொஞ்சம் வைக்கோலை உருவித் திரட்டித் தலையணையாக்கிப் படுத்துக் கொண்டான். சலேத்தாவும் உறங்கத் தொடங்கியது. கண் திறந்து பார்த்த ரூபினுக்கு அது இரவா, பகலா என்று தெரியவில்லை. பெய்த பனி சன்னலை

அடைத்துவிட்டிருந்தது. கை வைத்துத் தள்ளிப் பார்த்தான். முடியவில்லை. குச்சி வைத்திருப்பது நினைவுக்கு வந்தது. பனிக்கட்டியைக் குச்சியால் குத்தித் தள்ளினான். குளிர் காற்று மெல்ல உள்ளே நுழைந்தது.

வெளியே இன்னும் இருட்டு. பனி தொடர்ந்து பெய்து கொண்டிருந்தது. காற்றின் ஓலம் ஒற்றைக் குரலாக, பிறகு பல குரல்களாகக் கேட்டது.

விழித்துக் கொண்ட சலேத்தா, ரூபினைப் பார்த்து, ''மா ...'' என்றது. அதன் மொழியில் இருந்தது ஒரே வார்த்தைதான். என்றாலும், பல அர்த்தங்களை அது உணர்த்திவிடும். இப்போது அந்த, ''மா'' என்ற வார்த்தை, கடவுள் கொடுப்பதை அது வெயிலோ, குளிரோ, பசியோ திருப்தியோ, ஒளியோ, இருளோ எதுவானாலும் அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதைக் குறிப்பதாக இருந்தது.

பசியோடு விழித்த ரூபினுக்குத்தான் ரொட்டியில்லை. ஆனால் சலேத்தாவிடம் பால் நிறைய இருந்தது. ஆகவே கவலை இல்லை.

மூன்று நாட்கள் அந்தக் குடிலிலேயே இருவரும் இருந்தார்கள். அதன் மீது அவனுக்கு அன்பு கூடிக்கொண்டே இருந்தது. அவனது பசிக்குப் பாலும் குளிருக்குக் கதகதப்பையும் தந்து கொண்டிருந்தது அது. பாதுகாப்பாக இருப்பதையும் உணர்ந்து கொண்டது. அதற்கு நிறைய கதைகள் சொன்னான். காதுயர்த்திக் கேட்டுக் கொண்டது. தடவும் போதெல்லாம் அவன் கைகளையும் முகத்தையும் நக்கிக் கொடுத்தது. பிறகு, ''மா'' என்றது. இப்போது அதன் அர்த்தம் அன்பு என்பது மட்டும்தான்.

மூன்று நாட்களிலும் பெய்த பனி விட்டபாடில்லை. பிறகு ஒரு வழியாகக் காற்று அமைதியாக வீசத் தொடங்கியது. அந்தப் பகுதியில் கோடைகாலம் என்ற ஒன்றே இருக்காது என்று கூட நினைத்தான் ரூபின்.

இப்போது அவனுக்குத் தாயில்லை. தந்தையில்லை. சகோதரர்களும் இல்லை. அவன் பனிக் குழந்தை. பனிக்குப் பிறந்த குழந்தை. ஃபலேத்தாவும் அப்படித்தான். குடிலில் அமைதி அவனது காதுகளில் நிரம்பி வழிந்தது. தூக்கத்தில் அவன் கண்ட கனவுகளும் வெயிலைப் பற்றியதாகவே இருந்தது.

பச்சை வயல்கள், பூ பூத்த மரங்கள், நீரோடைகள், பாடும் பறவைகள் எனப் பலவும் கனவுகளில் வந்து போயின. மூன்றாம் நாள் இரவு பனி பெய்வது நின்றது. ஆனால் அந்த இருட்டில் வழியைத் தேட ரூபின் முயலவில்லை.





வானம் தெளிவாகியது.
ரூபின், பனிக்கட்டிகளைக்
குடைந்தும் அகற்றியும் வெளியே
வர வழியை ஏற்படுத்தினான்.
உலகம் அப்போதுதான் அவன்
கண்ணில்பட்டது.

வெண்ணிற, அமைதியான உலகம்.
நட்சத்திரங்கள் பெரிதாகவும்
அருகாமையில் இருப்பதாகவும்
தோன்றின. ஆகாய வெளியில்
நீந்திக் கொண்டிருந்தது நிலா.



நான்காம் நாள் காலையில்,
சறுக்கு வண்டிகளின்
மணியோசையைக் கேட்டான்
ரூபின். குடில், பாதைக்கு
அருகில்தான் இருந்திருக்கிறது.
வண்டியை ஓட்டி வந்த
கிராமவாசி வழியைக் காட்டினார்.
அந்த வழி, நகரத்திற்குப் போகும்
வழியல்ல. கசாப்புக்
கடைக்காரன் பேவல் இருக்கும்
இடமல்ல. கிராமத்துக்குத்
திரும்பும் வழி. ரூபின் இனி
சலேத்தாவைப் பிரியவே கூடாது
என்று குடிலில் இருந்தபோது
முடிவெடுத்திருந்தான்.

பனிப்புயல் வந்தபோது வீட்டில் இருந்தவர்கள் எல்லாம் ரூபினையும், ஆட்டையும் தேடிப் பார்த்துக் கிடைக்காததால் தொலைந்து போய்விட்டதாகவும் பயந்திருக்கிறார்கள். ரூபினின் அம்மாவும், சகோதரிகளும் அழுதுகொண்டே இருந்தார்கள். அப்பாவோ மௌனமாகவும், துயரமாகவும் காணப்பட்டார். அப்போது சட்டெனப் பக்கத்து வீட்டுக்காரர் ஒருவர் ஓடிவந்து, ரூபினும் ஆடும் வந்து கொண்டிருப்பதைச் சொன்னார்.





குடும்பத்தில் மகிழ்ச்சி ஆரவாரம்
திரும்பியது. பனிப்புயலில்
மாட்டிக் கொண்டதையும்,
வைக்கோல் போர் குடில்
அமைத்து தங்கிக்
கொண்டதையும் ரூபின்
எடுத்துக் கூறினான்.

சலேத்தா அவனது பசிக்குப்
பால் தந்ததையும்
சொன்னபோது, சகோதரிகள்
வியந்து போய் சலேத்தாவை
இறுகக் கட்டிக் கொண்டார்கள்.
நறுக்கிய காரட்டுகள்,
உருளைக் கிழங்கின் தோல்
எல்லாம் கொடுத்து
சலேத்தாவின் பசி தீர்த்தார்கள்.

அதன் பிறகு அதை விற்பது என்ற பேச்சே எழவில்லை. மீண்டும் குளிர் காலங்கள் வந்த போதெல்லாம் ரூபினின் அப்பாவுக்குக் கம்பளி தயாரிக்கும் வேலை நிறைய இருந்தது.

திருவிழா வந்தபோது, ரூபினின் அம்மா மாலை வேளைகளில் கேக் தயாரிக்கத் தொடங்கினார். சலேத்தாவுக்குப் பங்கு கிடைத்தது. தனியாக்க் கொட்டில் ஒன்று இருந்த போதிலும் அது அடிக்கடி சமையலறைக்கு வந்துவிடும். கதவைக் கொம்புகளால் முட்டித் தனது வருகையை அறிவிக்கும்.

ரூபினும், அவனது சகோதரிகளும் சொக்கட்டான் விளையாடுவார்கள். சலேத்தா அடுப்பின் அருகில் இருந்து அவர்கள் திருவிழா மெழுகுவர்த்திகள் ஏற்றுவதைக் கவனித்துக் கொண்டிருக்கும்.

எப்போதாவது ரூபின் கேட்பான். ''சலேத்தா ... நாம் ஒன்றாயிருந்த அந்த மூன்று நாட்களை நினைவிருக்கிறதா உனக்கு ...?''



சலேத்தா, கொம்பால்
தனது கழுத்தைச்
சுரண்டிக் காட்டி
வெண்தாடி கொண்ட
தலையை அசைக்கும்.

அப்போது அதன்
வாயிலிருந்து அன்பு
நிறைந்த அந்த ஒற்றை
வார்த்தை வந்து விடும்.

அன்பை
முழுவதுமாகத் திறந்து
காட்டும் வார்த்தை.

''மா ...''

# ZLATEH

Isaac Bashevis Singer

At Hanukkah time, the road from the village to the town is usually covered with snow, but this year the winter had been a mild one. The sun shone most of the time. For Aaron the furrier it was a bad year, and after long hesitation he decided to sell Zlateh, the family's goat. She was old and gave little milk. Feivel, the town butcher, had offered eight gulden for her. Such a sum would buy Hanukkah candles, potatoes and oil for pancakes, gifts for the children, and other necessities for the house. Aaron told his oldest boy Reuben to take the goat to town.

Reuben understood what taking the goat to Feivel meant, but had to obey his father. Leah, his mother, wiped the tears from her eyes when she heard the news. Reuben's younger sisters, Anna and Miriam, cried loudly. Reuben put on his quilted jacket and a cap with earmuffs, bound a rope around Zlateh's neck and took along two slices of bread and cheese to eat on the road. Reuben was supposed to deliver the goat by evening, spend the night at the butcher's, and return the next day with the money. As they prepared to leave and the family said their goodbyes, Zlateh stood as patiently and good-naturedly as ever. She licked Reuben's hand as he placed the rope around her neck. Zlateh trusted human beings. She knew that they always fed her and never did her any harm.

Reuben and Zlateh set off on the road to town. They passed fields, pastures, and huts with thatched roofs. The sun was shining when they left the village. But, suddenly, the weather changed. A large black cloud with a bluish center appeared in the east and spread itself rapidly across the sky. A cold wind blew in with it. The crows flew low, cawing loudly. It was early in the day, but it became dark as dusk. It began to hail and, after a while, the hail turned to snow. In his twelve years, Reuben had seen all kinds of weather, but he had never experienced a snow like this one. It was so dense it shut out the light of the day. In a short time, their path was completely covered and Reuben no longer knew where he was. The wind was as cold as ice and the cold soon penetrated his quilted jacket. Zlateh too was twelve years old and she knew what winter meant, but as her legs sank deeper and deeper into the snow, she began to look at Reuben in wonderment. Her mild eyes seemed to ask, "Why are we out in such a storm?"

The snow grew thicker, falling to the ground in large, whirling flakes. Beneath it Reuben's boots touched the softness of a plowed field. He realized he had gone astray and was no longer on the road. He, no longer, knew which was east and west, which way was the village, the town. The wind whistled, howled, whirled the snow about. Zlateh stopped. She could walk no longer. Stubbornly, she anchored her cleft hooves in the earth and bleated as if pleading to be taken home. Reuben did not want to admit the danger, but he knew that if they did not find shelter, they would freeze to death. This was no ordinary storm. It was a mighty blizzard. The snow had reached his knees. His hands were numb and he could no longer feel his toes. Zlateh's bleating began to sound like crying. The humans in whom she had trusted had dragged her into a trap. Reuben began to pray to God for himself and for the innocent animal.

Suddenly, he made out the shape of a hill. What was it? Who could have piled the snow into such a heap? When he came near, he realized it was a large haystack which the snow had blanketed. He, happily, realized that they were saved. He was a village boy and knew what to do. He dug through the snow and when he reached the hay he hollowed out a nest for himself and the goat. No matter, how cold it may be outside, in the hay it

was always warm. And hay was food for Zlateh. The moment she smelt it she became contented and began to eat. Outside, the snow continued to fall and quickly covered the passageway Reuben had dug. He bored through the hay with his stick and made an opening so that air could reach them.

Zlateh, having eaten her fill sat down on her hind legs and seemed to have regained her confidence in man. Reuben ate his two slices of bread and cheese, but after the difficult journey he was still hungry. He noticed that Zlateh's udders were full. He lay down next to her, placing himself so that when he milked her he could squirt the milk in his mouth. It was rich and sweet. Zlateh was pleased to reward Reuben for bringing her to a shelter whose very walls, floor and ceiling were made of food!

Reuben peered through the small window opening he had made and saw it was completely dark outside. He did not know whether night had already come or whether it was the dark of the storm. Thank God. That in the haystack it was not cold. The dried hay, grass, and field flowers exuded the warmth of the summer sun. Zlateh's body also gave forth warmth, and Reuben cuddled next to her. He had always loved Zlateh, but now she was like a sister. He was alone, and missing his family, so he began to talk to Zlateh. "What do you think about what has happened to us?"

"Maaaaaa," was the goat's reply.

"If we hadn't found this haystack, we would both have been frozen stiff by now."

"Maaaaaaaa."

"If the snow keeps falling like this, we may have to stay here for days!"

"Maaaaa, maaaa."

"You can't speak, but I know you understand. I need you and you need me. Isn't that right?"

"Maaaaaa," Zlateh nodded sleepily. Reuben made a pillow out of some hay, leaned his head on it, and dozed off. Zlateh, too, fell asleep.

When Reuben opened his eyes, he didn't know if it was morning or night. He pushed his stick through the snow that had blocked up the window opening and saw it was still dark outside. The snow continued to fall and the wind wailed. Zlateh, too, awoke and when Reuben greeted her, she answered "Maaaaa." She seemed to be saying, "We must accept all that God gives us – heat, cold, hunger, satisfaction, light and darkness." Reuben had awakened hungry and he was grateful that Zlateh had plenty of milk. And she ate frequently; she nibbled from above, from below, from the left and right.

For three days, Reuben and Zlateh stayed in the haystack. Reuben had grown up with Zlateh and had always loved her, but in these three days he loved her more and more. She fed him with her milk and helped him keep warm. She comforted him with her patience. He told her many stories and she always cocked her ears and listened. When he patted her, she licked his hands and face. Then she said, "Maaaa," and he knew it meant, "I love you too." By the third night, the sky became clear and the moon shone, casting silvery nets on the snow. Reuben dug his way out and looked at the world. It was all white, quiet, dreaming dreams of heavenly splendor. The stars were huge and close. The moon swam in the sky as in a velvet sea.

On the morning of the fourth day, Reuben heard the jingling of sleigh bells. The haystack was not far from the road. The farmer who drove the sleigh pointed out the way to him – not to the town and Feivel, the butcher, but home to the village. Reuben had decided in the haystack that he would never part with Zlateh. Reuben's family and their neighbor's had searched for the boy and the goat as well as they could during the storm but had found no trace of them. They feared they were lost. Reuben's mother and sisters had cried for him; his father remained silent and gloomy. Suddenly, one of the neighbor's came running to their house with the news that Reuben and Zlateh were coming up the road. There was great joy in the family. Reuben told them how he had found the haystack and how Zlateh had fed him with her milk.

Nobody ever again thought of selling Zlateh, and now that the cold weather had really set in, the villagers needed the services of Aaron, the furrier, once more. When Hanukkah

came, after lighting the lights Reuben, Miriam and Anna played dreidel. Zlateh sat near the stove watching the children and the flickering of the Hanukkah candles. Once in a while, Reuben would ask her, "Zlateh, do you remember the three days we spent in the haystack together?". And Zlateh would seem to smile as she nodded her white head and came out with the single sound that expressed all her thoughts and all her love: "Maaaaa!"

எங்கள் வீட்டுத் தோட்டம் அதற்கு
எத்தனை பறவை வருமோ?
மஞ்சள் மூக்கு மைனா இரண்டு
வந்து பூச்சி பிடிக்கும்
சிட்டுக்குருவி பத்து மணலில்
தினமும் முழுகிக் குளிக்கும்
பெட்டைக் கோழி ஒன்று குஞ்சை
பிரியமாக காக்கும்
சின்னஞ்சிறிய சிட்டு பூவின்
தேனை குடிக்கும் சிட்டு
கன்னங்கரிய சிட்டு அதுவும்
காலைப் பொழுதில் வருமே
பச்சைக் கொன்றைக் காயைப் பறித்து
பவழ வாயில் தின்னும்
பச்சைக் கிளியின் கூட்டம் புதரில்
பறந்து பறந்து மறையும்
எங்கள் வீட்டுத் தோட்டம் அதிலே
எத்தனை எத்தனை பறவை
அங்கு நானும் செடியின் மறைவில்
அவற்றைப் பார்த்து மகிழ்வேன்.

-பெ. தூரன்

